REGD. No. TN-MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

பொதுநலன்

தனி மனிதனுக்காகப் பொது மக்களின் நலனைக் கவனிக்காமல் விட்டு விடக் கூடாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

அறிவு

அறிவை நம்பினால் தான்விஞ்ஞான அற்புதங்களை யெல்லாம் நம் நாட்டில் செய்ய முடியும்.

- தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 19—8—1981 புதன் வெளியூர்: 20—8—1981 வியாழன் இதழ் 300

## கொள்ளை லாபம் அடிப்பதற்காக விலைவாசியை உயர்த்தினால்

# கடும் நடவடிக்கை

## புரட்சித்தலைவர் எச்சரிக்கை

வேலூர், ஆக. 19- வெளிமார்க்கெட்டில் விலைவாசியை உயர்த்துபவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

வேலூரில் நடந்த பிரம்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

மது அருந்தக் கூடாது என்பதில் என் மூச்சு இருக்கும் வரைமாறமாட்டேன். மாற்றிக் கொள்ள மாட்டேன்.

பணக்காரர்கள் பர்மிட் வாங்கி குடிக்கலாம்ஏழைகள் பர்மிட் வாங்கி குடிக்கக் கூடாது என்றால். நான் கேட்கிறேன், யாருடைய பிரதிநிதி அவர்கள்?

மொரார்ஜி தேசாய் மது அருந்தக்கூடாது என்ற கொள்கை உடையவர். என்னுடைய கொள்கையும் அதுதான். குடிக்கக்கூடாது என்பதற்காக என்னென்ன தடைகளை விதித்தேன்! சட்டங்களைக் கொண்டுவந்தேன்.

### காரணம் யார்?

அன்றைய தினம் ஒத்துழைத்தார்களா? தி.மு.க.வினரை கைது செய்து சிறையில் அடைக்க இந்த சட்டம் என்றார்கள். அன்றைய தினம் ஒத்துழைத்திருந்தால் இத்தகைய நிலை ஏற்படுமா?

உங்கள் கட்சியினரை சிறையிலடைக்க இந்த சட்டம் என்றீர்கள். அதன் பிறகு தாய்மார்களின் கண்ணீர் சாராயத்தோடு கலந்து வீதியில் ஓடுகிறது என்றீர்கள். சாராயம்வீதிவீதியாக அல்ல, வீடு வீடாக ஓடுகிறது என்றீர்கள். ஆட்சி நடத்த திராணியில்லை என்று சொன்னீர்கள்.

சட்டங்களைகடுமையாக்கினேன். தேவராஜ் அர்ஸ் சொன்னார் நீங்கள் வெற்றி பெற மாட்டீர்கள் என்று. இரண்டாண்டுகளில் மது விலக்கை செம்மையாக அமல்படுத்தி காண்பிக்கிறேன் என்றேன். அதிகாரிகள் அமல்படுத்த முனைந்தார்கள்.

### தூண்டி விட்டீர்களே

இத்தனைக்கும் பிறகு அதிகாரிகள் மீது குற்றம் சுமத்தினீர்கள். லஞ்சம் வாங்குகிறார்கள். போட்டி அரசாங்கம் நடத்துகிறார்கள் என்று சொல்லி தூண்டி விட்டீர்கள்.

மதுவிலக்கை ரத்துச் செய்து விட்டோமா? இத்தனை வயதுக்கு மேல் மது அருந்தலாம் என்றால் அத்தனை வயதுக்கு மேற்பட்ட அனைவரும் மது அருந்த வேண்டும் என்பதல்ல.

மது அருந்துவது வெளியே தெரியக்கூடாது, பள்ளி, சர்ச், மசூதி, கோவில் போன்ற இடங்களுக்கு அருகேகடை இருக்கக் கூடாது என்று உத்தரவு போட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட விதிகளை மீறினால் ரத்து செய்யப்படும் என்று அறிவித்திருக்கிறோம்.

பணத்தைப்பற்றிகவலைப்பட்டிருந்தால் அடியோடு அல்லவா ரத்து செய்திருப்போம்?

கருணாநிதி எங்கு போனாலும் ஆட்சி மாற்றப் போராட்டம் என்றுசொல்லிக் கொண்டிருக்கிறார்.

ஏதோ இவர் தான் ஓட்டுப்போட்டு எங்களைத் தேர்ந்தெடுத்தது போலவும் இவர்தான் ஓட்டுக்களை கையில் வைத்திருப்பது போலவும் பேசுகிறார். ஏதோ புதிய அரசியல் சட்டத்தை கையில் வைத்துக் கொண்டு இருப்பவர் போல பேசுகிறார். எங்களை ஆட்சியை விட்டு இறக்க போராட்டம் நடத்துகிறாராம்.

### இதுதான் ஜனநாயகம்

ஓட்டுப்போட்டுஆட்சிக்கு அனுப்பியது மக்கள். மக்கள் விரும்பினால் மீண்டும் ஆட்சிக்கு வரலாம். இல்லையென்றால் வீட்டுக்கு போக வேண்டும். இதுதான் ஜனநாயகம்.

விலைவாசியைக் குறைக்க போராட்டம் நடத்தப் போவதாக கூறுகிறார்கள். விலையை நானா ஏற்றினேன்?

கருணாநிதி ஆட்சிகாலத்தில் நெல் நடமாட்டத்திற்குத் தடை இருந்தது. ஒருநாள் திடீரென்று யார் வேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் நெல்லைக்கொண்டு போகலாம் என்று உத்தரவிடப்பட்டது. தயாராக இருந்த ஆயிரக்கணக்கான லாரிகளில் நெல்-அரிசி ஏற்றிச் செல்லப்பட்டது.

தமிழகத்தில் அரிசியே காலியாகியது. குமரி மாவட்டத்தில் 9 ரூபாய் முதல் 11 ரூபாய் வரை படி அரிசி விற்றது. இப்படி நாங்கள் உத்தரவு ஏதும் போட்டோமா?

அரிசி விலை உயராமல் தடுக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. நியாய விலைக் கடைகளில் அரிசி விலை உயராமலிருக்க அதிகாரிகள் நடவடிக்கை எடுத்து வருகிறார்கள்.

வெளிமார்க்கெட்டில் விலையை உயர்த்துபவர்களை மக்கள் ஒத்துழைப்புடன் கண்டுபிடித்து நடவடிக்கை எடுக்கப்படும். அப்படிப்பட்டவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க மத்திய அரசு அதிகாரம் தந்திருக்கிறது. தேசிய பாதுகாப்புச்சட்டம் இருக்கிறது.

நாட்டு மக்கள் உழைக்கும் வர்க்கம் பட்டினி கிடக்காமல் தடுக்க வேண்டியது எங்கள் கடமை.

### போராட்டம் ஏன்?

தி.மு.க.வினர் போராட்டம் நடத்தப் போகிறார்களாம். அது அவர்கள் உரிமை. கட்சியை மக்கள் மறந்து விடக் கூடாது என்பதற்காக ஏதாவது செய்ய வேண்டுமே என்பதற்காக போராட்டம் நடத்துகிறார்கள்.

பிரதமர் இந்திரா காந்தியே "போராட்டம் நடத்துவதால் விலைவாசி குறைந்து விடுமா?" என்று கேட்டிருக்கிறார். நான் கேட்டால் ஆட்சி செய்ய முடியாதவன் என்பார்கள். இந்திரா காந்தியை சொல்ல முடியுமா?

நேரு அவர்கள் இந்திரா அம்மையார் குழந்தையாக இருந்த போதே பல நாடுகளுக்கு அழைத்துச் சென்றவர். பல்வகை அறிவுகளையும் பெற்றவர் இந்திரா. நாங்கள்ஏதாவது சொல்லி இருந்தால் அது தவறு என்று காட்டி மக்கள் ஓட்டுப் போட்டு பிர

(2-ம் பக்கம் பார்க்க)

வேலூரில் நடந்த போலீஸ் விழாவில் சிறந்த பெண் காவலருக்கான விருதினை முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினார்.

## ஜோலார்பேட்டையில் ரயில்விபத்து: டிரைவர் மரணம்-11பேர் காயம்

சென்னை, ஆக 19- ஜோலார்பேட்டை அருகே நேற்று இரவு பயங்கர ரயில் விபத்து ஏற்பட்டது. இந்த விபத்தில் ஒருவர் மரணமடைந்தார். 11 பேர் உயிருக்கு ஆபத்தான நிலையில் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

சென்னை ஜோலார் பேட்டை அருகே நேற்று இரவு பயங்கர ரயில் விபத்து ஏற்பட்டது. இந்த விபத்தில் ஒருவர் மரணமடைந்தார். 11பேர் உயிருக்கு ஆபத்தான நிலையில் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

இது பற்றிய விவரம் வருமாறு:-

திருவனந்தபுரத்திலிருந்து பெங்களூர் செல்லும் ஐலண்டு எக்ஸ்பிரஸ் ரயில் நேற்று 2.30 மணிக்கு ஜோலார் பேட்டையிலிருந்துபுறப்பட்டுச்சென்றது.

சற்று தூரத்தில் அதே பாதையில் சில கூட்ஸ் பெட்டிகள் நின்றிருந்தன. ஆனால் ஐலண்டு எக்ஸ்பிரசுக்கு சிக்னல் கிடைத்ததையொட்டி ரயில் புறப்பட்டுச்சென்றது.

வேகமாக வந்த ஐலண்டு எக்ஸ்பிரஸ் நின்று கொண்டிருந்த கூட்ஸ் பெட்டிகள் மீது பயங்கரமாக மோதியது.

### டிரைவர் மரணம்

இந்த மோதலில் ஐலண்டு எக்ஸ்பிரசின் என்ஜின் தூள்தூளானது, ரயிலை ஓட்டி வந்த டிரைவர் ராமலிங்கம் (வயது 35) அதே இடத்திலேயே நசுங்கிச் செத்தார்.

என்ஜினை அடுத்து இருந்தபெட்டி தலைகீழாகக் கவிழ்ந்தது. அடுத்திருந்த பெட்டிகள் ஒன்றைஒன்று மோதியதால் ஒரு பெட்டி தீப்பிடித்து எரிந்தது.

இதனால் பெட்டிக்குள் இருந்த 11 பேர் பலத்த காயம் அடைந்தனர். உயிருக்கு ஆபத்தான நிலையில் இவர்கள் ஜோலார் பேட்டை, வேலூர் மருத்துவமனைகளில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

3 பெண்கள், 2 குழந்தைகள், உட்பட 11 பேர் மருத்துவமனைகளில் தீவிர சிகிச்சை பெற்று வருகின்றனர்.

விபத்து நடந்த இடத்தை ரயில்வே துணை இன்ஸ்பெக்டர் ஜெனரல் சீத்தாராமன் சென்று பார்வையிட்டார் மற்றும் ரயில்வே உயர் அதிகாரிகள் சென்று பார்வையிட்டனர்.

இந்த விபத்தினால் 8 மணிநேரம் ரயில் போக்குவரத்து பாதிக்கப்பட்டது.

விபத்தில் காயமடைந்த

## நெசவாளர்கட்கு அனகாபுத்தூர் ராமலிங்கம் ஆறுதல்

திண்டுக்கல், ஆக. 19— திருச்சியில் நடந்த திமுக மாநாட்டுக்குச் சென்றபோது லாரி விபத்தில் காயமடைந்த நெசவாளர்களுக்கு, கைத்தறி ஆலோசனைக்குழுத்தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் ஆறுதல் கூறினார்.

காயமடைந்த 43 பேரும் விபத்தில் இறந்த ஐவரும் சின்னாளபட்டி நெசவாளர் பிரைமரி கூட்டுறவு சங்க உறுப்பினர்களாவர்.

காயமடைந்தவர்களை மருத்துவ மனைக்குச் சென்றும்; சிகிச்சை பெற்றுத் திரும்பியோரை அவர்களது வீடுகளுக்குச் சென்றும் சந்தித்து ஆறுதல் கூறினார்.

காயமடைந்தோருக்கு தலா 25 ரூபாய் உதவித்தொகை முன்பணமாக வழங்கப்பட்டது.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

புதிய சரித்திரம் படைக்கும் வகையில் அமையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. தொண்டர்கள். மாநாட்டு பணிகளை சுறுசுறுப்புடன் பம்பரமாக சுழன்று செய்து கொண்டிருக்கிறார்கள். மாநாட்டுப் பந்தலை பார்வையிட கழகப்பொது செயலாளர் ப.உ.ச. இம்மாதம் 23ந் தேதி நெல்லைக்கு வர இருப்பதாக நெல்லையில் கழக கொள்கை பரப்பு செயலாளர் திருப்பூர் மணிமாறன் எம் எல் ஏ கூறினார். மாநாட்டிற்கு 2000 பணியன்கள் திருப்பூரில் இருந்து தயாரித்து தொண்டர் படைக்கு கொடுக்கப்படும் என தெரிவித்தார்.

## நெல்லை மாநாடு: 1000 சைக்கிளில் அண்ணா ஜோதி

### தூத்துக்குடியிலிருந்து வருகிறது

திருநெல்வேலி, ஆக. 19—நெல்லையில் அடுத்த மாதம் 5, 6 தேதிகளில் நடைபெறும் நெல்லை மாவட்டக் கழக மாநாட்டுக்கு 1000 தொண்டர்கள் சைக்கிள்களில் அண்ணா ஜோதி கொண்டு வருகிறார்கள்.

நெல்லை மாவட்ட கழக மாநாட்டுக்கான ஏற்பாடுகள் தீவிரமாக நடந்து வருகின்றன.

மாவட்ட செயலாளர் கருப்பசாமி பாண்டியனும் மற்றும் தோழர்களும் இரவு பகலாக மாநாட்டுப் பணிகளில்ஈடுபட்டுள்ளனர்.

மாநாட்டிற்கு தூத்துக்குடியிலிருந்து 1000 தொண்டர்கள் சைக்கிள்களில் அண்ணா ஜோதி கொண்டு வருகிறார்கள். ஒவ்வொரு ஒன்றியும் நகரத்திலிருந்தும் 15க்கும் மேற்பட்ட பஸ்களில் தொண்டர்கள் வருகிறார்கள்

கழகத் தலைவர்கள் அனைத்து மாவட்டச் செயலாளர்கள் தமிழக சட்டப் பேரவை கழக உறுப்பினர்கள் தங்குவதற்கு நெல்லையில் தங்கும் அறைகள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

அனைத்து மாவட்டங்களில் இருந்தும் மாநாட்டிற்கு வருகை தரும் கழகத் தோழர்களுக்கு தங்குவதற்கு இடவசதிகள் செய்யப்பட்டுள்ளன. தொண்டர் படை அமைக்கப்பட்டுள்ளது.

நெல்லை மாநாடு இப்போதே களை கட்டத் தொடங்கிவிட்டது. எங்கு பார்த்தாலும் வண்ண சுவரொட்டிகளும், விளம்பரங்களும் கண்ணைப் பறித்திடும் வகையில் உள்ளது. மாநாட்டு பணிகளை மாவட்ட செயலாளர் கருப்பசாமி பாண்டியன் இரவு, பகல் பாராது பம்பரமாக சுழன்று செய்து கொண்டிருக்கிறார். குமரிமாவட்டத்திலிருந்து இருபதுபேருந்துகளில் தொண்டர்கள் வர இருக்கிறார்கள் என குமரி மாவட்டகழக செயலாளர் எப். எம். ராசரத்தினம் கூறியுள்ளார்.

மதுரை மாநகர் மாவட்ட செயலாளர் எஸ். பாண்டியன் தலைமையில் தொண்டர் படை வர இருக்கிறது. அனைத்து மாவட்டங்களில் இருநதும் தொண்டர்கள் பேருந்துகள் மூலம் நெல்லைக்கு வர தயாராகி கொண்டிருக்கிறார்கள்.

நடைபெற இருக்கும் மாநாடு தமிழகத்தில்-

(1-ம் பத்தி பாக்க)

## முன்னாள் எம். எல். ஏ. கழகத்தில் இணைந்தார்

சென்னை, ஆக 19— வட ஆற்காடு மாவட்டம் பெரணமல்லூர் தொகுதி முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் பி. சந்திரன் உழைப்பாளர் முன்னேற்றக் கட்சியிலிருந்து விலகி புரட்சித்தலைவர் அவர்களது ஒப்புதலுடன் பொதுச் செயலாளர் ப.உ.ச. அவர்கள்முன்னிலையில்கழகத்தில்இணைந்தார்.

அப்போது வட ஆற்காடு மாவட்ட துணைச் செயலாளர் கூடலூர் எ. வ. வேலு, கே. ஏ. விழிவேந்தன், ஆர். கே. மெய்யப்பன், வி. குப்புசாமி, கே. முருகன், பி. எல். பூங்காவனம், வந்தவாசி எஸ். ஷெரீப், ஆற்காடு ஒன்றிய செயலாளர் பழனி, ஆரணி அண்ணா தொழிற்சங்கத் தலைவர் ஆர். சுப்பிரமணி எம். ராஜேந்திரன் ஆகியோர் உடனிருந்தனர்.



நெல்லையில் செப்டம்பர் 5, 6 தேதிகளில்

## உடல் மண்ணுக்கு, உயிர் கழகத்துக்கு
## கடலெனத் திரண்டு காட்டுவோம் பூமிக்கு

### ஓய்வு பெறும்

# பத்திரிகையாளர்களுக்கு ஓய்வூதியம்

## அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

சென்னை. ஆக. 19—பத்திரிகையாளர்களுக்கு ஓய்வு ஊதியம் தருவதற்கு வகை செய்யும் சட்டம் விரைவில் கொண்டு வரப்படும் என்று அமைச்சர் ஆர். எம். வீ, அறிவித்தார். இதற்கான முதலீட்டையும் அரசு அதிகரிக்கவிருக்கிறது என்றும் அவர் கூறினார்.

பத்திரிகை சுதந்திரத்தை துஷ்பிரயோகம் செய்து, அரசு எடுக்கும் நடவடிக்கைகளை கொச்சைப்படுத்தி எழுதும் பத்திரிகைகளை நிருபர் சங்கங்கள் வன்மையாக கண்டிக்க முன் வரவேண்டும் என்றும் அமைச்சர் ஆர்.எம்.வீ. வற்புறுத்தியிருக்கிறார்.

சென்னை பத்திரிகை நிருபர்கள் சங்கக்கூட்டம் நேற்று சென்னையில் நடைபெற்றது. தமிழக அரசு செய்தித்துறை செயலாளர் கிருஷ்ணமூர்த்தி, மக்கள் தொடர்பு அதிகாரி நடராஜன் மற்றும் மத்திய மாநில அரசு அதிகாரிகள் பலரும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

நிருபர்கள் சங்கம் சார்யில் வெளியிடப்படும் "நியூஸ்மென்" பத்திரிகையை அமைச்சர் ஆர். எம். வீ. வெளியிட்டார். முதல் பிரதியை பாரதஸ்டேட் பாங்கின் மக்கள்தொடர்புமேலாளர் மில்கா சிங் பெற்றுக் கொண்டார்.

அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசுகையில் கூறியதாவது:

பத்திரிகையாளர்கள் நாட்டின் முன்னேற்றத்துக்கானபல்வேறுமுக்கியப் பணிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். மக்களுக்கு தேவைப்படும் பல செய்திகளை சேகரித்து நல்ல முறையில் அரசு நடைபெற வேண்டும் என்ற நோக்கத்தில் பணியாற்றிவருகிறார்கள். அவர்கள் உடல் வலுவுடனும் உள்ளத் தூய்மையுடனும் திறமையுடனும்இருப்பது அவசியம்.இன்றையபத்திரிகையாளர்கள் வாழ்க்கை தரத்தில் மிகவும் குறைந்த நிலையிலேயே இருநது வருகிறார்கள். செல்வாக்குள்ள ஒரு சில பத்திரிகையாளர்கள் தவிர 90 சதவிகித பத்திரிகையாளர்கள் வசதியற்ற நிலையிலேயேஇருந்துவருகிறார்கள் அவர்களின் வாழ்க்கை வளம் பெறுவதில் தமிழக அரசு மிகவும் அக்கறை செலுத்தி வருகிறது.

### புனிதமான தொழில்

நிருபர்கள் சேகரித்துக் கொடுக்கும் செய்திகள் அப்படியே பத்திரிகைகளில் வெளியிடப் படுகிறதா என்பதையும் நிருபர்கள் உன்னிப்பாய் கவனிப்பது நல்லது.

நிருபர்கள் ஒன்று கொடுக்க அந்தச் செய்தி வேறுவடிவத்தில்வெளிவருமானால் அது அந்த நிருபருக்கு எததுணை இழுக்கை ஏற்படுத்தும் எனபதை எண்ணிப்பாருங்கள்.

பண்போடும்,கண்ணியத்தோடும் நடத்தப்படுகிற பத்திரிகைகள் கொஞ்சம் தான் இருக்கின்றன நேற்று பெய்த மழையில் இன்று முளைத்த காளான் போல சில பத்திரிகைகள் தோன்றி மறைந்துவிடுகின்றன. ஆனால அந்தப் பத்திரிகைகள், கொஞ்ச நாட்களிலேயே மக்களுக்கு கேடுகளை விளைவித்துவிடுகின்றனஒருபிரபலரவுடியை 4 நாட்கள் வெளியே விட்டால் கூட அந்த 4 நாட்களில் அவன் 40 பேர்களை கொன்றுவிடும் நிலைமை ஏற்பட்டு விடுகிறது. இதை அனைவரும் எண்ணிப்பார்க்க வேண்டும். பத்திரிகைகளும் பத்திரிகையாளர்களும் எவ்வளவு பொறுப்புடனும், கடமை யுணர்வுடனும் நடந்து கொள்ளவேண்டும் என்பதை நான் சொல்லித்தான் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற நிலையில் நீங்கள் இல்லை.

### நடவடிக்கை அவசியம்

பத்திரிகைகள் பூரண சுதந்தரம் பெற்றிருக்கின்றன. இந்த சுதந்தரத்தை சில பத்திரிகைகள் துஷ்பிரயோகம் செய்கின்றன. அரசு எடுக்கும் நடவடிக்கைகளையே அவை கொச்சைப்படுத்தியும், கேவலப்படுத்தியும் செய்திகளை வெளியிடுகின்றன. வெளியிடுகிற செய்திகள் உண்மையாக இருக்க வேண்டாமா? இந்த தவறான போக்கை நிருபர்களும் நிருபர்கள் சங்கமும் வன்மையாக கண்டிக்க வேண்டும்.பொய்ச் செய்திகளை வெளியிடும் பத்திரிகைகள் மீது பத்திரிகையாளர் சங்கங்கள் நடவடிக்கை எடுக்க வேண்டும்,

எங்கோ ஓர் இடத்தில் பத்திரிகைக்கு அசம்பாவிதம் நடந்துவிட்டது என்பதனால் அதை அரசு விட்டுவிடாது. தமிழக அரசு தலை சிறந்த அரசு. தவறு செய்தவர்களை அது கண்டித்தே தீரும்.

பத்திரிகைகளை மிரட்டும் அரசு புரட்சித்தலைவர் அரசு அல்ல.

### பழைய சம்பவம்

இப்படித்தான் செய்திகளை போட வேண்டும் என்றோ, அல்லது பத்திரிகைகளை மிரட்டும் சம்பவங்களோ புரட்சித்தலைவர் ஆட்சியில் எப்போதாவது நடந்திருக்கிறது என்று கூறமுடியுமா?

ஆனால் குமுதம், ஆனந்த விகடன் சில கருத்துக்களை எழுதியதால் அவற்றின் மீது திட்டமிட்டுதாக்குதல் நடத்தப்பட்ட சம்பவங்கள் முன்பு நடந்திருக்கின்றன. தினசரி பத்திரிகைகள் தாக்கப்பட்டன.

இதையும் நீங்கள் அறிவீர்கள்.

அரசு விளம்பரங்களை தங்கள் இஷ்டம் போல் எடுத்துக் கொண்டு மற்றவற்றை வெளியிடமறுக்கும் பத்திரிகைக்கு மீண்டும் விளம்பரம் எப்படி கொடுக்கமுடியும்?

ஒரு அரசாங்க விளம்பரத்தை வெளியிட மறுக்கும் உரிமை அந்த பத்திரிகைக்கு உண்டு என்றால் விளம்பரத்தை கொடுக்காமல் நிறுத்தும் உரிமையும் அரசுக்கு உண்டு.

### போட்டி தேவைதான்

பத்திரிகைகள் இடையே ஆரோக்கியமான போட்டி இருப்பது தான் நல்லது. முன்னதாக செய்திகளை வெளியிடுகிறோம் என்ற ரீதியில் தவறான செய்திகளை வெளியிடுவார்களேயானால் அதை எவ்வாறு அனுமதிப்பது? அந்தப் போக்கு நாட்டை குட்டிச்சுவராக்கிவிடும்.இந்த நிலை மாற வேண்டும். தரமான உள்ளத் தூய்மையுடனும் சேவா மனப்பான்மையுடனும் பணியாற்றும் நிருபர்கள் உருவாக்கப்படவேண்டும்.

நானும் பத்திரிகையாளராக இருந்திருக்கிறேன். தஞ்சையில் 'ஞாயிறு' என்கிற பத்திரிகையை நானும் ஏ. கே. வேலனும் சிரமப்பட்டுநடத்தியிருக்கிறோம்.

பத்திரிகையாளர்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கான நடவடிக்கைகளை தமிழக அரசு எடுத்து வருகிறது.

வீட்டுவசதிவாரியம் கட்டும் வீடுகளில் பத்திரிகையாளர்களுக்கு ஒதுக்கீடு செய்வதில் அரசு கவனம் செலுத்தி வருகிறது. வீடு கட்ட நிலம் ஒதுக்குவதிலும், வாடகை வீடுகள் ஒதுக்குவதிலும் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் அளிப்பதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்படும்.

### பென்ஷன் திட்டம்

ஓய்வு பெறும் பத்திரிகையாளர்களுக்கு "பென்ஷன்' வழங்கும் திட்டத்துக்கு மத்திய அரசு ஒப்புதல் அளித்துள்ளது. இதற்கான நகல் மசோதா வரும் சட்டசபை தொடர் கூட்டத்தில் கொண்டு வரப்படும்.

நிருபர்கள் சங்கத்துக்கு கட்டிடம் கட்டுவது, அதற்கான மனை ஒதுக்கித்தருவது பற்றி அரசு உடனடியகக பரிசீலனை செய்யும். வசதியான நிலத்தை நீங்கள் தெரிந்து கொண்டு சொன்னாலும் அதற்கான உதவிகளை செய்ய நான் கடமைப்பட்டுள்ளேன்.

பென்ஷன் விஷயமாக ஒதுக்கப்பட்டிருக்கும் 2 லட்சம்ரூபாய் தொகையை அதிகரிக்கவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

அரசினர் தோட்டம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பகுதியாகும். நகரத்தின் இதயம் போன்ற பகுதியில் எப்போதோ கவர்னருக்காகவும், அவர துகுதிரைகளுக்காகவும் கட்டப்பட்ட லாயங்கள் இருந்து வருகின்றன. அதையொட்டி சில பழைய வீடுகளும் உள்ளன. இந்தப்பகுதியில் அழகான கட்டிடங்கள் வளாகங்கள் அயல்நாட்டு உல்லாசப் பயணிகள் கவர்ந்திழுக்கும் காம்ப்ளெக்ஸ்கள் அங்காடிகள் கட்டலாம்.

பத்திரிகையாளர்கள் மக்களுக்கு சீரிய முறையில் பணியாற்றும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

உங்களது குறைகளைத் தீர்த்து வைப்பதில் என்னால் முடிந்த உதவிகளை செய்வேன்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. பேசினார்.

முன்னதாக நிருபர்கள் சங்கத்தலைவர் என். நரசிம்மன் (இந்து பத்திரிகை) வரவேற்றுப் பேசினார் சங்க செயலாளா சந்திரசேகரன் நன்றி கூறினார்.

சென்னையில் உள்ள அனைத்து பத்திரிகைகளின் நிருபர்கள் மற்றும் வடமாநில பத்திரிகைகளின் விசேஷ நிருபர்கள், சென்னை வானொலி, டெலிவிஷன் நிலைய செய்தியாளர்கள், பி. டி. ஐ. யு. என். ஐ. நிருபர்கள், மத்திய மாநில அரசு அதிகாரிகள் மற்றும் பலரும் இந்த விழாவில் கலந்து கொண்டனர்.

### மேட்டூர் அணை நிரம்புகிறது

திருச்சி, ஆக. 19— மேட்டூர் அணைக்கு மிக அதிக அளவில் தண்ணீர் வந்து கொண்டிருக்கிறது. இதே அளவுக்கு 2 தினங்களுக்கு தண்ணீர் வந்தால் அணை நிரம்பிவிடும். அணையின் முழு அளவு 120 அடியாகும். நேற்று மாலை நீர்மட்டம் 102.02 அடி.

### அறங்காவலர் குழுத்தலைவர் தேர்வு

சென்னை, ஆக. 19— சென்னைதியாகராயநகர்ரங்கநாதன் தெருவில் உள்ள விநாயகர் கோயில் அறங்காவலர் குழுத் தலைவராக சி. எம். சாமி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மற்ற அறங் காவலர்கள் விவரம் வருமாறு:

வெ. பாஸ்கரன், வி. சண்முகம், செ. தங்கராஜன், கேசவமணி ஆகியோராவர்.

(6 ம் பத்தி தொடர்ச்சி)

யிட்டிருக்கிறது. இதை தி.மு.க. வினர் பாராளுமன்றத்திலேயே கேட்கலாமே? 12 கோடி ரூபாய் இருந்தால் ஏன் வீட்டை விற்க வேண்டும்' ஸ்டுடியோவை விலைப்பச வேண்டும்?

### இதுகூட தெரியாமல்..

ஒரு முதலமைச்சர் வீட்டில் சோதனையிடுவது என்றால் மத்திய அரசின் அனுமதி பெற்றாக வேண்டும்.ஏதோ வியாபாரி வீட்டில் சோதனை செய்தது போல, என் வீட்டில் வருமானவரி அதிகாரிகள் சோதனை நடத்தியதாக செய்தி வெளியிட்டிருக்கிறார்கள்.

என் படுக்கை அறையில் சி. பி. ஐ. அதிகாரிகள் சோதனை செய்ததாகவும் அந்தப் பத்திரிகையில் செய்தி வெளியிட்டிருக்கிறார்கள், தங்களின் அனுபவத்தை என்ன பயன் படுத்தி வெளியிட்டிருக்கிறார்கள்.

இத்தனை கொடுமைகளுக்கும் காரணம் கட்சிக்காரர்களை நம்பவைக்க கருணாநிதியும் மற்றவர்களும் செய்யும் முயற்சிகள்.

தி. மு. க.வின் எதிர்காலம் என்ன என்று கேட்கிறார்கள். அதிகமாக கேட்பவர்கள் பதவியிலிருந்து இறக்கப்படுகிறார்கள்.

தமிழக அரசைப் பொறுத்தவரைஜாதிமதம் என்பது கிடையாது எனனைப் பொருத்தவரை தாய்தான் கடவுள்.

கோவில்களில் நம்பிக்கை உள்ளவர் போனால் தடை செய்ய முடியாது. அவர்களுக்கு பாதுகாபபு தரப்படும்.

தீண்டாமை ஒழிக்கப்படவேண்டும். நாட்டில் அமைதி இருக்கிறது. அதை நாம் காப்பாற்றியாக வேண்டும்.

எந்த கட்சி இதை சீர்குலைக்க முயன்றாலும் தமிழக அரசும் மக்களும் சேர்ந்து தூள் தூளாக்கும். வீண் பயமுறுததல் வேண்டாம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

### அர்ஸ் காங்கிரஸ் பெயர் மாறுகிறது

புதுடெல்லி, ஆக, 19— தேவராஜ் அர்ஸ் தலைமையிலான காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டிக் கூட்டம் ஆகஸ்டு 24ந்தேதி நடக்கிறது. கட்சியின் பெயரை மாற்றி, புதிய பெயர் சூட்ட உறுப்பினர்களிடையே ஒருமித்த கருத்து நிலவுவதாக கட்சியின் பொதுச் செயலாளர் உன்னிகிருஷ்ணன் தெரிவித்தார்.

### முதல்வர் பேச்சு...

(1-ம பக்கத் தொடர்ச்சி)

தமராக உட்கார வைத்திருக்கிறார்கள்.

### நல்லதை ஏற்கிறோம்

காங்கிரஸ் கட்சி 20 அம்ச திட்டத்தை அறிவித்த போது நாங்கள் ஆட்சியில் இல்லாவிட்டாலும் வரவேற்றோம்.5 அம்ச திட்டத்தையும் வரவேற்றோம். போட்டியிட்டு வெற்றி பெற்ற பிறகும் 20 அம்ச திட்டத்தை வரவேற்றோம். நல்லதை யார் செய்தாலும் நாம் ஏற்றுக் கொள்கிறோம்.

கடந்த ஆண்டு 69 யூனியன்களில் தன்னிறைவு திட்டத்தை செயல்படுத்தினோம். இந்த ஆண்டு 150 யூனியன்களுக்கு 150கோடி ரூபாயை செலவிட்டு வருகிறோம்.

தேர்தலுக்கு முன்பு விவசாயிகள் கடனை ரத்து செய்வோம் என்றோம். ஏறத்தாழ 150 கோடி ரூபாய்க்கானசலுகைகளைத் தந்திருக்கிறோம்.

கருணாநிதி நேற்று கூட தீர்மானம் போடுகிறார். "விவசாயிகள் கடனை ரத்துச் செய்வோம் என்றார்கள். இன்னமும் ரத்து செய்யவில்லை" என்று கூறியிருக்கிறார்.

நாங்கள் ஆட்சிக்கு வந்து ஒரு ஆண்டு 2 மாதம் ஆகிறது. இதுவரை 150 கோடி ரூபாயை ரத்து செய்திருக்கிறோம். இன்னும் 90 கோடி தான் ரத்து செய்ய வேண்டும். கொடுத்த வாக்குப்படி இன்னும் 3 ஆண்டு காலத்தில் இதை செய்ய அவகாசமிருக்கிறது. இதை மட்டும் செய்து விட்டால் போதுமா? விவசாயிகளுக்கு வேறு எந்த நன்மையும் செய்ய வேண்டாமா?

### பாவம் கருணாநிதி

கருணாநிதி விவசாயிகள் கடனை தள்ளி வைத்துக் கொண்டே வந்தார். வட்டியை தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார். அது தண்ட வட்டியாக மாறி பெரும் சுமையாகி விட்டது.

புதிதாககறுப்புச்சட்டை ஊர்வலத்தை கருணாநிதி அறிவித்திருக்கிறார்.

இந்த அரசும், கழகமும் மணலால் செய்யப்பட்டதாம். அவர்கள் தாக்கினால் தூள் தூளாகி விடுமாம்.

ஒப்புக்கொண்டு விடுகிறேன். நாங்கள் ஆயுதங்களை வைத்து அரசியல் நடத்தவில்லை. அண்ணா தந்த அறிவை வைத்து ஆட்சி நடத்துகிறோம்.

மத்திய அரசு ரே கமிஷன் அமைத்தவுடன் ஒத்துழைப்பு தருகிறேன் என்றேன். சர்க்காரியா கமிஷன் என்றவுடன் சந்திக்க மறுத்தார் கருணாநிதி. இந்த ராமச்சந்திரன் அப்படி அல்ல.

நான் குடியிருக்கும் தோட்டத்தில் வருமான வரி அதிகாரிகள் சோதனை நடத்தி 12 கோடிரூபாயை எடுத்திருப்பதாக ஒரு பத்திரிக்கை செய்தி வெளி

(5-ம் பத்தி பார்க்க)

## புரட்சிதலைவர் தலைமையில் மதுரை மேயர் மகள் திருமணம்

மதுரை, ஆக. 19— மதுரை மேயர் பாலகிருஷ்ணனின்மகள்மாலதிக்கும் பாண்டிச்சேரிடி.எஸ். அழகர்சாமியின்மகன் டி.ஏ ரமேஷுக்கும் முதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் நாளை (20-ந் தேதி) காலை 10 மணிக்கு மாரியம்மன் தெப்பக்குளம் கீதா நடனகோபால நாயகி மந்திரில் திருமணம் நடக்கிறது.

அமைச்சர் ஆர். எம்.வீ. முன்னிலையில் நடக்கும் இத்திருமணத்தில் மணமக்களை வாழ்த்தி, சபாநாயகர், ராஜாராம், நிதியமைச்சர் டாக்டர் நாவலர், கழக பொதுச் செயலாளர் ப. உ. ச. மற்றும் அமைச்சர்கள் சிறுசேமிப்பு திட்ட துணைத் தலைவர் எஸ்.எஸ்.ஆர். முன்னாள் மதுரை மேயர் முத்தண்ணன், அரசு கொறடா திருப்பூர் மணிமாறன் எம். எல். ஏ., அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத்தலைவர் முசிறிபுத்தன், ஆகியோரும் மற்றும் நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினர்கள், மதுரை மாநகராட்சி கழக கவுன்சிலர்கள்,கழகப் பிரமுகர்கள் ஆகியோர் பேசுகிறார்கள்.

### திண்டுக்கல்லில் மாபெரும் பொதுக்கூட்டம்

இடம் : நாகல்நகர் தண்ணீர்தொட்டி

நாள் : 23 8-81

நேரம் : மாலை 7 மணி

தலைவர்: சி. சீனிவாசன் (நகரச் செயலாளர்)

சிறப்புரை :

**ப. உ. ச.** அவர்கள்

திருப்பூர் இரா. மணிமாறன்

பா. வளர்மதி

இரா. முத்தையா எம். எல் ஏ. (மாவட்டச் செயலாளர்)

கே. குப்புசாமி எம். எல். ஏ. (மாவட்ட துணைச் செயலாளர்)

ஆ. வெள்ளைச்சாமி எம். எல். ஏ.

எஸ். டி. எம். சையத்கான் (மாவட்ட எம் ஜி ஆர் மன்றச் செயலாளர்)

மு. காதர்சா (மாவட்ட பொருளாளர்)

வி. பி பாலசுப்பிரமணியம் எம் எல் ஏ

வா. சிவநாத்பாபு (நகர அவைத்தலைவர்)

சு. முத்துகோபால்

டாக்டா எம். நாகராஜன்

திருமதி ராஜாபாய்

மற்றும் பலர்

கூட்டஅமைப்பு: நகர அனைத்திந்திய அண்ணா தி. மு. க. திண்டுக்கல்.

தலைமைக்கழக அறிக்கை எண்: 147-81-

### உறுப்பினர்கள் சேர்க்கும் வாரம்

பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்ததினமான செப்டம்பர் 15-ந் தேதி முதல் 22-ந் தேதி வரை கழக உறுப்பினர்கள் சேர்க்கும் வாரமாகக் கருதி, புதிய உறுப்பினர்கள் சேர்க்கும் பணியில் ஆங்காங்குள்ள கிளைக் கழக-ஒன்றிய-நகர-மாவட்ட-மாநில செயலாளர்கள் தீவிரமாக ஈடுபட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கிளைக் கழகம் இல்லாத கிராமம் இருத்தல் கூடாது. கிளைக்கழகம் உள்ள கிராமங்களில் மேலும் புதிய உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும்.

கழக ஆக்கப் பணிகளில் ஈடுபடாத கிளைக் கழகங்களை மாற்றியமைக்க வேண்டிய நிலைமைக்கு என்னை ஆளாக்க மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

உறுப்பினர் சேர்க்கும் பாரங்களை மாநில—மாவட்ட—ஒன்றிய—நகர—கிளைக்கழக செயலாளர்களின் மூலம பெற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.

ப. உ. சண்முகம்

சென்னை-14, 19-8-81 — பொதுச்செயலாளர், அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

தலைமைக் கழக அறிக்கை எண்: 146-81

### ஆந்திர - கேரள - மகாராஷ்டிர அந்தமான்-குஜராத்-பீகார் மாநில கிளைக்கழக தேர்தல்

வரும் 23 ந்தேதி ஆந்திரா-கேரளா-மகாராஷ்டிரா அந்தமான் - குஜராத் - பீகார் ஆகிய மாநிலங்களில் இருக்கின்ற கிளைக் கழகங்களின் தேர்தல் நடைபெறும்.

அனைத்து கிளைக் கழக உறுப்பினர்களுக்கும் உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு விட்டன.

23-8-81 அன்று காலை கழகத் தோழர்கள் கூடி கீழ்க்கண்ட நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

| | |
|---|---|
| அவைத்தலைவர் | 1 |
| செயலாளர் | 1 |
| துணைச்செயலாளர் | 1 |
| பொருளாளா | 1 |
| மேலமைப்புப் பிரதி நிதிகள் | 2 |

தலைமைக் கழகத்திலிருந்து அனுப்பப்படும் வெற்றிப்படிவத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பெயர்களைப் பூர்த்திசெய்து உடனடியாக தலைமைக் கழகத்துக்கு அனுப்ப வேண்டும். வெற்றிப்படிவங்கள் அந்தந்த பதிவு செய்யப்பட்டுள்ள கிளைக்கழகங்களுக்கு நேரடியாக தலைமைக் கழகத்திலிருந்து அனுப்பப்படும்.

ஆந்திரா—கேரளா—மகாராஷ்டிரா—அந்தமான்-குஜராத் — பீகார் ஆகிய மாநிலங்களில் உள்ள கிளைக் கழகத் தோழர்கள் அமைதியுடன் இத்தேர்தலை நடத்தித் தருமாறு மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்கள் சார்பாக வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

ப. உ. சண்முகம்

சென்னை-14, 19-8-81 — பொதுச்செயலாளர், அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

★ தாய்த் தமிழைத் தரணியெங்கும் பரப்ப புதிய அமைப்பு
★ தஞ்சையில் செப்டம்பர் 15,16,17, தேதிகளில்மாபெரும்விழா
★ தொடக்க விழாவுக்குத் தனி ரயில்கள்
★ கவியரங்கம் பட்டிமன்றம் கலைவிழாக்கள்

## தமிழ்ப் பல்கலைக்கழக தொடக்கவிழாவுக்கு

# கோலாகல ஏற்பாடுகள்



### பி. எச். பாண்டியன் நாளை சென்னை திரும்புகிறார்

சென்னை, ஆக. 19— பிரேசில் நாட்டின் செள பௌலோ நகரில் 16-ந் தேதி துவங்கிய உலக சட்ட விதிகள் பற்றிய பத்தாவதுமாநாட்டில் தமிழ்நாடு அரசின் சார்பில் சட்டபேரவை துணைத்தலைவர் பி. எச். பாண்டியன் கலந்து கொண்டார்.

செள பௌலோ நகர கத்தோலிக்க கதீட்ரலில் உலக சட்ட நாள் கொண்டாடப்பட்டது. இதில்மற்ற பிரதிநிதிகளுடன் சட்ட பேரவை துணைத்தலைவர் பி. எச். பாண்டியன் கலந்து கொண்டார். மேலும் செள பௌலோ நகர மேயர் ஏற்பாடு செய்திருந்த சட்ட விதிகள் பற்றிய கருத்தரங்கிலும் கலந்து கொண்டார்.

தமது வெளி நாட்டுப் பயணத்தை முடித்துக் கொண்டு பி. எச்.பாண்டியன் நாளை (20-ந் தேதி) இரவு 10.15 மணிக்கு சென்னை விமான நிலையம் வந்து சேருகிறார்.

கல்விக் கட்டண சலுகை

### புரட்சித் தலைவருக்கு ஆசிரியர்கள் பாராட்டு

தேவக்கோட்டை, ஆக. 19— ஆசிரியர் இணைப்பு இயக்க மாநில செயலாளர் குகானந்தம் விடுத்துள்ள அறிக்கையொன்றில் தெரிவித்திருப்பதாவது:-

ஆசிரியர்களின் குழந்தைகள் கல்லூரிகளில்படித்துக் கொண்டிருந்தால் அவர்களுக்கு ஆகும் கல்விக் கட்டணத்தை இனி அரசே ஏற்க புரட்சித் தலைவரின் அரசு உத்தரவிட்டுள்ளது.

அதோடு 1-6-81 முதல் ஒன்றிய ஆசிரியர்கள் அரசு ஊழியராக மாற்றப்பட்டதை அடுத்து, கூடுதல் ஊதிய உயர்வு, இருபதாண்டு பணிக்கு சிறப்பு நிலை ஊதியம் வகைகட்கு உரிய ஆணைகளை அரசு பிறப்பித்துள்ளமைக்கும் ஆசிரியர் இணைப்பு இயக்கத்தின் சார்பில் நன்றியையும் பாராட்டையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறு குகானந்தம் தெரிவித்துள்ளார்.

### இங்கிலாந்துகோர்ட்டுக்கு இந்தியப் பெண் நீதிபதி

புதுடெல்லி, ஆக. 19— இங்கிலாந்து கோர்ட்டுக்கு இந்தியப்பெண் மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்பட்டுள்ளார்.

காஷ்மீர் தலைநகரான ஸ்ரீ நகரில் பிறந்தவர் திருமதி காந்தா தல்வார் இவர்இங்கிலாந்தல் வசிக்கிறார்.

இந்த அம்மாள் தற்போது விடுமுறைக்காக இந்தியாவுக்கு வந்துள்ளார். இவர் இங்கிலாந்தின் மேற்கு பகுதியில் குளவுசெஸ்டர் நகரில் உள்ள பெஞ்ச்கோர்ட்டுக்கு மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப் பட்டுள்ளார்.

இத்தகவலை காந்தாவிடம் லண்டனிலுள்ள அவரது கணவர் தல்வார் டெலிபோனில் தெரிவித்தார்.

இங்கிலாந்து கோர்ட்டுக்கு மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்படும் முதல் ஆசியப் பெண் திருமதி காந்தாதான் என்பது குறிப்பிடத்தக்கது.

புரட்சித்தலைவர் தகவலை ஊர்ஜிதப்படுத்தும் மற்றொரு தகவல்.

## பல லட்சம் பணத்துடன் இந்தியாவுக்கு வந்துள்ள அரபு மர்ம மனிதர்கள்

**பாட்னா, ஆக. 19— முஸ்லிம் நாடானகுவைத்தைச் சேர்ந்த 2 ஷேக்குகள் இந்தியாவுக்கு வந்து லட்சம் லட்சமாக பணத்தை செலவிட்டு வருகிறார்கள்.**

எண்ணை வள நாடான குவைத்தைச் சேர்ந்தவர்கள் ஒவத்அல்—கல்புசியா, மற்றொருவர் ரஷீத் அல்—காமிர்.

இருவரும் ஜூலை 4 ந் தேதி டெல்லிக்கு வந்தார்கள் பின்னர் அங்கிருந்து ஆகஸ்ட் 9 ந் தேதி பீகார் தலைநகரான பாட்னாவுக்கு வந்தனர் அங்குள்ள பெரிய ஓட்டலில் அறை எடுத்துத் தங்கினார்கள்.

பாட்னாவிலுள்ள பள்ளி வாசல்களுக்குச் சென்றார்கள். முஸ்லிம் பிரமுகர்களையும் பள்ளிவாசல் நிர்வாகிகளையும் சந்தித்தார்கள்.

பள்ளிவாசல் வளர்ச்சிக்காகப் பல லட்சம் ரூபாய்களை அவர்கள் நன்கொடையாகஅளித்தனர்.

தமிழ்நாட்டில் மதம் மாற்றத்துக்கு அரபுநாடுகளின்பெட்ரோல்வர்த்தகப் பணம் தாராளமாக பயன்படுத்தப்படுவதாக ஏற்கெனவே ஒரு செய்தி வந்ததல்லவா?

மதமாற்றத்துக்கு வெளி நாட்டுப் பணம் காரணமாக இருக்கலாம் என்று முதல்வர் புரட்சித்தலைவரும் கூறியுள்ளார். இந்த கருத்தை மத்திய அமைச்சர் ஆர். வி, சாமிநாதனும் ஏற்கனவே சொல்லியுள்ளார்.

மதக்கலவரம் நடந்த பீகார் ஷெரீப்புக்கும் மதமாற்றம் நடந்துள்ள தமிழகத்துக்கும் வர அந்த ஷேக்குகள் விரும்பவில்லை. அங்கு சென்றால் தவறான எண்ணங்கள் ஏற்படும் என்று அவர்கள் அஞ்சுகிறார்கள்.

பத்திரிகையாளர்களையும் சந்திக்க அவர்கள் விரும்பவில்லை.

அவர்கள் வருகை பற்றி இந்திய அரசுக்குத் தெரியாமல் இருக்க முடியாது. அவர்கள் இந்திய விசா வைத்திருக்கிறார்கள்.

இவர்கள் முஸ்லிம்மத நிறுவனங்களுக்கு பல லட்ச கணக்கில் கொடுக்கும் பணம் இந்திய அரசுக்கு தெரிந்தே கொண்டு வரப்பட்டதா என்பதும் தெரியவில்லை.

### பரபரப்பான செய்திகள்

உலக பள்ளி வாசல்கள் சம்மேளனத்திலிருந்து அந்த பணம் கொண்டு வரப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

ஒரு முஸ்லிம் நிறுவனத்துக்கு ரூ. 35 லட்சம் அவர்கள் கொடுத்துள்ளதாக ஊர்ஜிதமாகாத ஒரு செய்தி கூறுகிறது.

இவர்களைப் பற்றி மெலும் பல பரபரப்பான செய்திகள் பீகார் வட்டாரத்தில் அடிபடுகின்றன.

### டெல்லியில் கொள்ளை கோஷ்டி பிடிபட்டது

புதுடெல்லி, ஆக. 19— கடந்த வாரம் டெல்லியில் கொள்ளை கோஷ்டி ஒன்று பிடிபட்டது தெரிந்ததே.

3 மாநில மக்களை நடுநடுங்க வைத்த அக்கொள்ளை கோஷ்டியை சேர்ந்த செரு, விக்ரம் ஆகிய இருவர் பிடிபடாமல் இருந்தனர்.

நேற்றுமுன் தினம்திஹார் சிறையில் பிடிபட்டவர்களுடன் திருட்டுத்தனமாக தொடர்பு கொள்ள மேற்கண்ட கொள்ளையர்கள் இருவர் வந்தனர். அப்போது போலீசார் அவர்களை வளைத்துப் பிடித்தனர்.

ராஜ்ய சபையில் பரபரப்பு

### எதிர்க்கட்சி வரிசையில் அமைச்சர் ஜைல்சிங்

புதுடெல்லி, ஆக. 19— நேற்று காலை மாநிலங்களவை தொடங்குவதற்கு சற்று நேரத்துக்கு முன்பு மத்திய உள்துறை அமைச்சர் ஜைல்சிங் எதிர்க்கட்சி வரிசையில் உட்கார்ந்து கொண்டு உறுப்பினர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

அப்போது அவைத் தலைவர் இதயத்துல்லா தனது இருக்கையல் வந்து உட்கார்ந்தார்.

உடனே ஒருஎதிர்க்கட்சி உறுப்பினர் எதிர்க்கட்சியில் உறுப்பினர் எண்ணிக்கை உயர்ந்துவிட்டது என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

அவைத்தலைவரும் அதற்கு சிரித்துக் கொண்டே பதில் அளித்தார். உங்கள் கட்சியில்ஆட்கள்குறைந்து கொண்டு போவதை சரிப்படுத்த இவர் வந்திருக்கிறாரோ என்னவோஎன்று கூறினார்.

அவைத்தலைவரின் பேச்சு மாநிலங்களவையில் மேலும் சிரிப்பொலியை ஏற்படுத்திற்று.

## துணை - பதிவு அலுவலகங்களை அதிகரிக்கமுடிவு

**அமைச்சர் கே. ஏ. கே. தகவல்**

நாகர்கோவில், ஆக. 19—தமிழ்நாட்டில் அனைத்து வட்டாரங்களிலும் துணை - பதிவு அலுவலகங்கள் அமைக்கப்படும் என அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

கன்னியாகுமரி மாவட்டம் தோவாளையில் புதிதாக துணைப் பதிவாளர் அலுவலகத்தை ஊரக, தொழில் துறை அமைச்சர் கே. ஏ. கே. திறந்து வைத்தார்.

நிகழ்ச்சியில் பேசுகையில் அமைச்சர் கே.ஏ.கே. கூறியதாவது:

தமிழ் நாட்டில் மொத்தம் 746 ரெவின்யூ வட்டாரங்கள் உள்ளன.

இவற்றில் 492 ரெவின்யூ வட்டாரங்களில் துணைப பதிவாளர் அலுவலகங்கள் உள்ளன.

மீதியுள்ள வட்டாரங்களிலும், துணை பதிவாளர் அலுவலகங்கள் திறக்கப்படும்.

பதிவுச்சட்டத்திலுள்ள குறைபாடுகளை அகற்றவும் அரசு ஆலோசித்து வருகிறது.

இவ்வாறு அமைச்சர் கே.ஏ.கே. கூறினார்.

நிகழ்ச்சியில் அமைச்சர் கே. ஏ. கே. 37 ஆதிதிராவிடர்களுக்கு வீட்டுமனைப் பட்டாக்களை வழங்கினார்.

## நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேட்டி

**தஞ்சை, ஆக. 19- அன்னைத் தமிழை அகில உலகிலும் பரப்ப புரட்சித்தலைவர் ஆட்சியில் தஞ்சையில் அமைய இருக்கும் தமிழ் பல்கலைக் கழகத் துவக்க விழாவிற்கு பிரும்மாண்டமான ஏற்பாடுகள் நடை பெற்று வருகின்றன.**

பேரறிஞர் பெருந்தகை அண்ணாவின் பிறந்தநாளை ஒட்டி செப்டம்பர் 15, 16, 17ஆகிய 3நாட்களில்நடைபெறஇருக்கும் சிறப்பு ஏற்பாடுகளை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களிடம் கூறினார்.

உலகத்தமிழ் மாநாடு மதுரையில நடந்த போது தமிழ் பல்கலைக் கழகம் பற்றியும் அது தஞ்சையில் அமையும் என்பதையும் முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்து இருந்தார்.

அமைய இருக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகம் பற்றி நேற்று தஞ்சையில ஆலோசனைக்கூட்டம் நடந்தது.

நிதி அமைச்சர் டாக்டர் நாவலர், வருவாய்த்துறை அமைச்சர் எஸ்.டி.எஸ். கல்வி அமைச்சர் அரங்கநாயகம் ஆகிய மூவரும் இந்த ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

மாவட்ட ஆட்சித் தலைவர் துரைசுந்தரேசனும் மற்றும் அதிகாரிகளும் இந்த ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

### தரணி முழுவதும் தமிழ்

உலகிற் சிறந்த உன்னத மொழியாம் தமிழ் மொழியை தரணி எங்கும் பரப்பும் வகையில் தமிழ்ப்பல்கலைக்கழகம் உருவாக்குவது குறித்து இந்த கூட்டத்தில் ஆலோசிக்கப் பட்டது.

தமிழ்ப் பல்கலைக் கழக தனி அதிகாரி சிவகுருநாதனும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

இந்த ஆலோசனைக் கூட்டம் தஞ்சை அரண்மனை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தில் நடந்தது.

### மூன்று நாள் விழா விவரம்

இந்த ஆலோசனைக் கூட்டத்திற்குப் பிறகு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நிருபர்களுக்குப் பேட்டி அளித்தார்.

நிதியமைச்சர் டாக்டர்நாவலர் கூறியதாவது:

பேரறிஞர் பெருந்தகை அறிஞர் அண்ணா பிறந்த நாளில் தமிழ் பல்கலைக் கழகம் தொடங்கப்படுகிறது.

செப்டம்பர் 15, 16, 17 ஆகிய மூன்று நாட்களில் விழா சிறப்பாக நடத்த திட்டமிடப்பட்டுள்ளது.

15-ம் தேதி மாலை தொடக்கவிழா தஞ்சை விளையாட்டுத் திடலில் நடைபெறும்.

### கருத்தரங்கம் பட்டிமன்றம் கலை நிகழ்ச்சிகள்

செப்டம்பர் 16, 17 தேதிகளில் கவியரங்கம் கருத்தரங்கம், பட்டிமன்றம், விவாத மன்றம் முதலிய பல நிகழ்ச்சிகள் நடைபெறும்.

இந்த நிகழ்ச்சிகளில் சிறந்த தமிழ் அறிஞர்கள் பங்கேற்பார்கள்.

3 நாட்களிலும் இசை, நாட்டியம், நாடகம் முதலிய கலை நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

### விழாவில் மக்களுக்கு வசதிகள்

தமிழ் பல்கலைக்கழக துவக்க விழாவுக்கு வரும் மக்களுக்கு தேவையான வசதிகள் செய்துதர திட்டமிடப் பட்டுள்ளது.

விழா ஏற்பாடுகளை மாவட்ட ஆட்சித்தலைவரும், மற்றஅதிகாரிகளும் செய்வார்கள்.

குடிநீர் வசதி, சுகாதார வசதிகள், நிரந்தர-மற்றும் தற்காலிக கழிப்பிடங்கள் கட்டுதல், ஒளிவிளக்குகள் அமைத்தல் போன்றவற்றை செய்யும்படி அதிகாரிகளுக்கு அறிவுறுத்தப் பட்டுள்ளது.

### தனிரயில்கள் பேருந்துகள்

தொடக்க விழாவில் மக்கள் வந்துபோக வசதியாக தனியாக ரயில்கள், பேருந்துகள் விடவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

தமிழ் பல்கலைக்கழக தொடக்க விழாவான செப்டம்பர் 15-ம் தேதியன்று தஞ்சை மாவட்டத்தில் உள்ள அனைத்து அரசு அலுவலகங்களுக்கும் விடுமுறை அளிக்கப்படும்.

### 3 நாள் விடுமுறை

கல்லூர், மற்றும் பள்ளிகளுக்கு 3 நாட்கள் விடுமுறை அளிக்கப்படும்.

மக்களுக்குத் தேவையான ஏற்பாடுகள் செய்ய நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.



திருப்பெரும்புதூரில் இன்று

### முசிறிப் புத்தன் பேசுகிறார்

சென்னை, ஆக. 19— இன்று மாலை (19-ம்தேதி) திருப்பெரும்புதூர் பஸ் நிலையம் அருகில் நடக்கும் கழகப் பொதுக் கூட்டத்தில் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன், செயலாளர் திருச்சிசவுந்திரராசன் பேசுகிறார்கள்.

கூட்டத்திற்கு பிள்ளைப் பாக்கம் கே. மூர்த்தி தலைமை தாங்குகிறார். காஞ்சி பன்னீர் செல்வம் ஜெகத்ரட்சகன எம்.எல். ஏ. ஆர். சண்முகம் எம். எல். ஏ. மற்றும் பலர் பேசுகிறார்கள்.

அமைச்சர் பங்கேற்ற

### கழக கொடியேற்று விழா

வள்ளியூர், ஆக. 19— குமரிமாவட்டம் வள்ளியூர் ஒன்றியத்தில் காவல கிணற்றில் அம்பரோஸ் தலைமையில், எம். ரோல்ட் முன்னிலையில், அமைச்சர் ராஜேந்திரன் கழக கொடியை ஏற்றுவித்தார்.

நெல்லை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் பாளை எஸ். நாராயணன், ஒன்றிய கழக செயலாளர் தங்கராஜ் ஆகியோரும் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publication and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor:
E. PARASURAMAN

# அண்ணா



# மாதம் 1 லட்சம் டன் அரிசி: மத்திய அரசுக்கு நாவலர் கோரிக்கை

**திருச்சி, ஆக. 19—மாதந்தோறும் ஒரு லட்சம் டன் அரிசியை தமிழகத்துக்கு அனுப்பி வைக்கவேண்டும் என்று மத்திய அரசுக்கு கோரிக்கை விடப்பட்டிருப்பதாக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தெரிவித்தார்.**

தமிழக நிதி மற்றும் உணவு அமைச்சர்டாக்டர் நாவலர் நேற்று திருச்சியில் நிருபர்கள் கூட்டம் ஒன்றில் பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:

குறுவை நெல் கொள்முதலை சென்ற ஆண்டைப் போலவே, இந்த ஆண்டும் தமிழக அரசு செயல்படுத்தும்.

அரவை மில்களுக்கு 40 சதவிகித லெவி முறையையும் அரசு கடைப்பிடிக்கும். பகிரங்க மார்க்கெட் விலையில் நெல் வாங்குவதற்கு கூட்டுறவு சங்கங்களுக்கும் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. கூட்டுறவு சங்கங்கள் பகிரங்க மார்க்கெட் விலையிலும் நெல்லை கொள்முதல் செய்யலாம்.

## சமாளித்து விடமுடியும்

ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர் ஆகிய மாதங்கள் தமிழகத்துக்கு இக்கட்டான கால கட்டம் என்றேசொல்லலாம். இந்த மாதங்களில் நெல் கொள்முதல்செய்வதும் அவற்றை வினியோகம் செய்வதும் சற்று சிரமமான காரியம்.

உணவுநிலைமையை நாம் இந்த ஆண்டு நல்ல முறையிலே சமாளித்து விடலாம் என்றேநம்புகிறோம். பரபரப்படைய வேண்டிய நிலைமையில் நாம் இல்லை.

மாதம் தோறும் ஒரு லட்சம் டன் அரிசிக்கு குறையாமல் தமிழகத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்று மத்திய அரசுக்கு ஏற்கனவே கோரிக்கை விடுத்துள்ளோம். இந்த கோரிக்கையின்படி வரும் மூன்று மாதத்துக்காவது ஒழுங்காக அனுப்புங்கள் என்று சொல்லியிருக்கிறோம்.

மாதத்துக்கு 10 ஆயிரம் டன் கோதுமையை தமிழகத்துக்கு ஒதுக்குங்கள் என்றும் மத்திய அரசுக்கு கடிதம் எழுதியிருக்கிறோம்.

ஆனால் அவர்கள் அரிசி அனுப்புவதோ 40 முதல் 50 ஆயிரம் டன் அரிசிதான். 10 ஆயிரம் டன் கோதுமை கேட்டால் அவர்கள் அனுப்புவது 3 ஆயிரம் முதல் 4 ஆயிரம் டன் கோதுமைதான்.

அனுப்பினது போக மீதியையாவது பின்னர் சேர்த்து அனுப்புவார்களா என்றால் அதுவும் இல்லை.

ஆந்திர மாநில முதலமைச்சர் அஞ்சய்யாவும் 70 ஆயிரம் டன் அரிசயை அனுப்புவதாக உறுதி அளித்துள்ளார். இதுவரை ஆந்திர மாநிலம் 25 முதல் 30 ஆயிரம் டன் அரிசியை அனுப்பியிருக்கிறது. மீதியாக இருக்கும் அரிசியையும் தொடர்ந்து அனுப்புமாறு தமிழக அரசு ஆந்திர முதலமைச்சருக்கு கடிதம் எழுதியிருக்கிறது.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர்கூறினார்.

# சுவரொட்டி பிரச்னை: நாடாளுமன்றத்தில் மீண்டும் அமளி

**புதுடெல்லி, ஆக. 19— சுவரொட்டிப் பிரச்னை தொடர்பாக நாடாளுமன்றத்தில் மீண்டும் கூச்சல் குழப்பம் ஏற்பட்டது.**

ஜெகஜீவன்ராம் மதம் மாறுவார் என்று வெளியிடப்பட்ட சுவரொட்டி பற்றி நாடாளுமன்றத்தில் காரசாரமான விவாதம் நடந்தது அல்லவா?

இந்தப் பிரச்சினை மீண்டும் கிளம்பியது. இந்தச் சுவரொட்டி எப்படித் தோன்றியது என்பது பற்றி உயர்மட்ட அளவில் விசாரணை நடத்தப்பட வேண்டும் என்று கே. கே. திவாரி (இ. காங்) கூறினார்.

நாடாளுமன்ற உறுப்பினர்களைக் கொண்ட ஒரு கமிட்டியை அமைக்க வேண்டும் என்று ஜெகஜீவன்ராம் கூறினார்.

இந்த சுவரொட்டிப் பிரச்சினையைக் கிளப்பிய திவாரி, அதை அச்சிட்டுவெளியிட்டதற்கு தாம் பொறுப்பல்ல என்றார். சுவரொட்டியில் அதனை அச்சிட்ட அச்சகத்தின் பெயர் உள்ளது என்று அவர் சொன்னார்.

தன்னிலை விளக்கம் அளிக்க திவாரிக்கு அனுமதி அளிக்கப்பட்டதை எதிர்க்கட்சியினர் ஆட்சேபித்தனர். சுவரொட்டியில் காணப்படும் அச்சடித்தவரின் பெயரும், அச்சகத்தின் பெயரும் போலியானவை என்று ஜெகஜீவன் ராம் கூறினார்.

குற்றாலத்தில்

## ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு விழா

நெல்லை ஆக, 19— ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு விழா இம்மாதம் 23-ம்தேதி குற்றாலம்கலைவாணர் அரங்கில் அரசின் சார்பில்நடைபெறுகிறது.

விழாவுக்கு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் தலைமை வகித்து, நூற்றாண்டு விழா நினைவு மண்டபத்திற்கு அடிக்கல் நாட்டுவார்.

முன்னாள் மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம் டி.கே.சி.யின் உருவப்படத்தைத் திறந்து வைக்கிறார்.

டி.கே.சி.யின் உருவச்சிலையை அமைச்சர் ஆர்.எம்.வீ. திறந்து வைக்கிறார்.

மேலவைத்தலைவர் டாக்டர் ம.பொ.சி. தலைமையில் சிறப்புக் கூட்டம் மாலை நடைபெறும்.

நீதிபதி மு. மு. இஸ்மாயில் நீதிபதி மகராஜன் மற்றும் பல தமிழ் அறிஞர்கள் விழாவில் பங்கேற்கிறார்கள்.

இரவு 7 மணிக்கு டாக்டர் எம்.எஸ்.சுப்புலட்சுமி இசை நிகழ்ச்சியும் நடைபெறுகிறது.



திட்டக்குடியில்

## அமைச்சர் பொன்னையன் பேசுகிறார்

திட்டக்குடி, ஆக. 19—தென் ஆற்காடு மாவட்டம்திட்டக்குடியில்அடுத்த மாதம் செப்டம்பர் 20-ந் தேதி ஞாயிறு மாலை அமைச்சர் பொன்னையன் பேசுகிறார் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழாப் பொதுக்கூட்டம் நடைபெறுகிறது.

கூட்டத்திற்கு ஹீரா சந்த், இரா. அரங்கசாமி, பழனி, ஆகியோர் முன்னிலை வகிக்க ஏ. கிருட்டிணசாமி தலைமை வகிப்பார். டி. ஆர். சுந்தரம், அன்பில் பாலு, ஆர். ஜி. கருணா ஆகியோர் வரவேற்புரை நிகழ்த்துவார்கள்,

அன்று மாலை 5 மணிக்கு வதிட்டபுரம் அண்ணாசிலையில் இருந்து புறப்படும் ஊர்வலத்தை பழனிமுத்து தலைமையில் டி. கே. துரை துவக்கி வைப்பார்.

## பூச்சிமருந்து மோசடி

புதுடெல்லி, ஆக. 19. பூச்சி மருந்து என்று சொல்லி போலி பொருள்களை வயல்களில் தெளித்து விவசாயிகளிடம் மோசடி செய்த 3 நபர்கள் கைது செய்யப்பட்டனர்.

பிரபல பூச்சி மருந்து கம்பெனியின் லேபிளைப் போட்டு இவ்வாறு டெல்லியில் மோசடி செய்து பல லட்சம் சுருட்டியுள்ளனர் அந்த ஆசாமிகள்.

காவலரை வெட்டிக் கொன்று விட்டு

## போலீசாரை சுடமுயன்ற ஆயுள்கைதி சுட்டுக்கொலை

மதுரை, ஆக. 19—போலீஸ்காரர் ஒருவரை வெட்டிக் கொலை செய்து விட்டு துப்பாக்கியுடன்ஓடி தலைமறைவான ஆயுள் தண்டனை கைதி சுட்டுக் கொல்லப்பட்டான்.

கையில் இருந்த துப்பாக்கியால் போலீசாரை அவன் சுட முற்பட்ட போது போலீசார் திருப்பிச் சுட்டனர்.

அந்த ஆயுள் தண்டனைக் கைதியின் பெயர் பெருமாள். வயது 28. மதுரை மாவட்டம் இளையாப்பட்டியைச் சேர்ந்தவன்.

இவன் மாமனாரையும், மனைவியையும் கொலைசெய்தற்காக ஆயுள் தண்டனை பெற்றுள்ள கைதி.

பரோலில் சொந்த ஊர் வந்தபோது இரு போலீஸ்காரர் உடன் வநதனர்.

அதில் ஒருவரை இவன் வெட்டிக் கொன்று விட்டு துப்பாக்கியுடன் தலைமறைவாகி விட்டான். இவனைப் பிடிக்க போலீசார் வலை வீசினர்.

அப்பாஸ்புரம் என்ற கிராமத்தில் துப்பாக்கி அரிவாளுடன் ஒரு கடைக்காரரை மிரட்டிக்கொண்டு இருந்தபோது போலீசார் வளைத்துக் கொண்டனர்.

போலீசாரை இவன் சுட முற்பட்ட போது போலீசார் திருப்பிச்சுட்டதில் தொடையில் குண்டு பாய்ந்து இறந்தான்.

கோடிக்கணக்கான ரூபாய் சொத்துக்களுக்கு நாசம்:

# இலங்கைத் தமிழர்கள் அடைக்கலம் தேடி ஓடுகிறார்கள்

**கொழும்பு, ஆக. 19—வீடுகளையும் சொத்துக்களையும் இழந்து ஆயிரக்கணக்கான இலங்கை வாழ் தமிழர்கள் அடைக்கலம் தேடி கொழும்புவுக்கும் மற்ற பகுதிகளுக்கும் ஓடுகிறார்கள். குழந்தைகளுடன் அவர்கள் புகலுடம் தேடி ஓடும் காட்சிகள் பரிதாபமாக உள்ளன. என்ற செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன,**

கடந்த 10 நாட்களாக இலங்கையின் பல்வேறு பகுதிகளில் வன்முறைச் சம்பவங்கள் நடந்தன. தமிழர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்து வரும் பகுதிகளில் வீடுகளுக்கு தீவைத்தல், சொத்துக்கள் சூறையாடல், கொலை,கொள்ளை முதலிய பயங்கர சம்பவங்கள் ஏற்பட்டன.

காகவட்டி, ரத்னபுரம், பலநோடா, நெகம்போ முதலிய பகுதிகளில் தமிழர்கள் பெரும் அளவில் பாதிக்கப்பட்டனர். தமிழ் பெண்கள் பலர் கற்பழிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. ஆண்களை வீட்டில் பூட்டி வைத்து தீ கொளுத்தப் பட்டசெய்திகளும்கிடைத்திருக்கின்றன

கடந்த செவ்வாயன்று பிற்பகல்இலங்கைபூராவும் அவசரநிலை பிரகடனம் அமுல்படுத்தப்பட்டதைத் தொடர்ந்து அமைதி ஏற்பட்டுள்ளதாகத் தெரிகிறது

## புகலிடம் தேடும்நிலை

ஆனாலும் ஆயிரக்கணக்கான தமிழர்கள் தங்கள் சொத்துக்களை இழந்து தவிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது. கும்பல் கும்பலாக தங்கள் மனைவி, பிள்ளைகளுடன் அவர்கள் தங்கள் வீடுகளை விட்டு புகலிடம் தேடி கொழும்புவுக்கும், இதர பகுதிகளுக்கும் ஓடுகிறார்கள்.

தமிழர் வாழும் பகுதிகளில் ஏற்பட்டுள்ள சேதம் பலகோடி ரூபாய் இருக்கும் என்று கூறப்படுகிறது. கண்ணீரும் கம்பலையுமாய் தமிழர்கள் வன்முறையாளர்களுக்கு பயந்து பாதுகாப்புத்தேடி ஓடும் காட்சி பரிதாபமாக இருக்கிறது என்று ஆங்கில, தமிழ்ப்பத்திரிகைகள் கூறுகின்றன. சிங்கள மக்கள் அதிக அளவில் வாழும் பகுதிகளில் உள்ள தமிழ் மக்களின் வீடுகள் வெறிச்சோடிக் கிடக்கின்றன. உண்ண உணவும் இன்றிகைப்பொருள்களையும் இழந்து தவிக்கும் ஆயிரக்கணக்கான அகதிகள் இநதிய தூதர் நிலையத்திலும், இதர இலங்கை அலுவலகங்களிலும் காத்துக் கிடக்கிறார்கள்

## எல்லாம் இழந்தநிலை

தாங்கள் சேமித்து வைத்திருந்த ஒரு சிறிய தொகையுடன் இந்தியா திரும்பி சற்று நிம்மதியுடன் குடும்பத்துடன் வாழலாம் என்று இருந்த தமிழர்களின் கதியும் அதோகதியாயிற்று. தங்களின் சேமிப்பு எல்லாவற்றையும் இழந்த நிலையில் அவர்கள் தவிக்கிறார்கள்.

இந்தியாவுக்குத் திரும்ப விரும்பும் அகதிகளை உடனடியாக அனுப்பி வைக்க தகுந்த நடவடிக்கைகளை எடுப்பதாக இந்திய தூதர் தாமஸ் ஆபிரகாம் உறுதி அளித்துள்ளார்.

## பாதுகாப்பு அளிக்க கோரிக்கை

அகில இலங்கை தமிழ் காங்கிரஸ் பாதிக்கப்பட்ட தமிழர்களுக்கு பாதுகாப்பு அளிக்குமாறு இலங்கை அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறது. அகதிகளாக இருக்கும் தமிழர்களை தமிழர் பகுதியான யாழ்ப்பாணம் மற்றும் கிழக்குப் பகுதிகளுக்கு அனுப்ப வேண்டும் என்று எதிர்க்கட்சித்தலைவர் ஏ. அமிர்தலிங்கம், ஜனதிபதி ஜெயவர்த்தனவைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். அகதிகளுக்கான முகாம்களை யாழ்ப்பாணத்தில் உள்ள இந்து கல்லூரி கட்டிடத்தில் திறப்பதற்கும் அமிர்தலிங்கம் ஏற்பாடு செய்துள்ளார்.

வன்முறைசம்பவங்களால் வேறு இடங்களுக்கு ஓடிய அனைவரும் தங்கள்சொந்த இருப்பிடங்களுக்கு திரும்பி வருமாறு இலங்கை அரசு கேட்டுக் கொண்டிருக்கிறது.

## ஆசிரியர்கட்கு காது கேட்கும் கருவி

சென்னை, ஆக. 19—அங்கீகரிக்கப்பட்ட எல்லா உதவி பெறும் பள்ளிகளிலும் (தொடக்க நிலை, உயர்நிலை, மேல்நிலை, சிறப்புப் பள்ளிகள்) பணியாற்றும் 'சி', 'டி', பிரிவு ஆசிரியர்களுக்கு இலவசமாகக் காது கேட்க உதவும் கருவிகளை அளிக்க தமிழ்நாடு அரசு முடிவு செய்துள்ளது.

நிரந்தர ஆசிரியர்கள், மற்றும் தகுதிகாண் பருவம் அங்கீகரிக்கப்பட்ட ஐந்தாண்டு காலத்திற்கு மேற்பட்ட ஒழுங்கான பணிநிலையுடைய ஆசிரியர்கள், தங்கள் பணியினைத் திறம்பட செய்வதற்குக் காது கேட்கும் கருவிகள் தேவைப்படுமாயின், அவர்களுக்குவழங்கப்படும். இது அவர்களின் ஊழிய காலத்தில் ஒருமுறைதான் வழங்கப்படும்.

மீனாட்சிபுரத்தில்

## மதம் மாறியவர்கள் திரும்பி வந்தனர்

தென்காசி, ஆக. 19—மீனாட்சிபுரத்தில் முஸ்லிமாக மாறிய 9 ஆதி திராவிடர்கள் மீண்டும் இந்து மதத்தில் சேர்ந்தனர்.

மதம்மாறிப் போனோம். அங்கேயும் எங்கள் இழிநிலை நீங்கவில்லை. ஆகவே மீண்டும் இந்து மதத்திற்கே வந்து சேர்ந்துவிட்டோம் என்று அவர்கள் கூறினார்கள்.

## பேச்சாளர் முகவரி

அண்ணா குரல் ஜி. கே, சாமி
176, குடிசை மாற்று வாரிய குடியிருப்பு
பூண்டி தங்கம்மாள் தெரு
புதுவண்ணை, சென்னை-81

அண்ணா தோட்டத்

## தொழிலாளர் சங்க நிர்வாகிகள் தேர்வு

நாகர்கோவில், ஆக.19. குமரிமாவட்டம் திருவெட்டாற்றில் குமரிமாவட்ட அண்ணா தோட்டத்தொழிலாளர் சங்க அமைப்புக் கூட்டம் அண்ணா தொழிற்சங்கப் பேரவைப் பொதுச் செயலாளர்வை.பெருமாள் தலைமையில் பேரவைத் துணைத் தலைவர் நம்பிராஜன், குமரிமாவட்டகழகச் செயலாளர் எப். எம். இராசரத்தினம் முன்னிலையில்நடைபெற்றது. பெருந்திரளான அளவில் தோட்டத் தொழிலாளர்கள் கலந்து கொண்டார்கள். சங்கத்தின் நிர்வாகிகளாக கீழ்க்கண்டவர்கள் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கோபிநாத் (தலைவர்) வி. கோவிந்தபிள்ளை (பொதுச் செயலாளர்) சந்திரசேகரன் நாயர், என். எஸ். தாஸ் (துணைத் தலைவர்கள்) வி. சுகதன், மனோகரன் துணைச்செயலாளர்கள். சி விஜயன்(பொருளாளர்) மற்றும் கமிட்டி உறுப்பினர்களாக 8 பேரும், ஆலோசகர்களாக3 பேரும் சட்ட ஆலோசகர்களாக 2 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.